

# இறுதி நாள்

*The Cooperative Offices for Call & Guidance at Al-Badiah & Industrial Area*
*Under the Supervision of the Ministry of Islamic Affairs Endowment Guidance & Propagation*
**P.O. Box: 24932 Riyadh 11456 - K.S.A. (Al-Badiah) Tel.: 4330888 (Four Lines)**
**(Industrial Area) Tel.: 4303572 - Fax: 4301122**

# اليوم الآخر

## اللغة التاميلية

أعده وترجمه للغة التاميلية،

## شعبة توعية الجاليات في الزلفي

**الطبعة الثانية مراجعة ومصححة ١٤١٧/٣هـ.**

ح شعبة توعية الجاليات بالزلفي ، ١٤١٦هـ

*فهرسة مكتبة الملك فهد الوطنية أثناء النشر*

الزلفي ، شعبة توعية الجاليات

اليوم الآخر - الزلفي.

٢٤ ص ؛ ١٢ × ١٧ سم

ردمك : X - ١٠ - ٨١٣ - ٩٩٦٠

١- القيامة ٢- البعث ٣- الجنة والنار

أ- العنوان

ديوي ٢٣٤ ١٦/١١٣٨

رقم الايداع ١٦/١١٣٨

ردمك : X - ١٠ - ٨١٣ - ٩٩٦٠

الصف والإخراج: **شعبة توعية الجاليات في الزلفي**

# موضوع الكتاب

الحمد لله رب العالمين والصلاة والسلام على أشرف الأنبياء والمرسلين وعلى آله وصحبه أجمعين، أما بعد،

فإن من أصول الإيمان وأركانه الستة الإيمان باليوم الآخر، فلا يكون الإنسان مؤمنا حتى يؤمن بما ورد في كتاب الله وما صح من سنة الرسول صلى الله عليه وسلم مما يتعلق بذلك اليوم. وإن العلم باليوم الآخر و الإكثار من ذكره مهم لما له من تاثير كبير على صلاح نفس الإنسان وتقواه واستقامته على دين الله، فما يقسي القلب ويجرئ على المعاصي مثل الغفلة عن ذكر ذلك اليوم وأهواله وشدائده الذي قال الله فيه، ﴿يوما يجعل الولدان شيبا﴾ وقال أيضا، ﴿ياأيها الناس اتقوا ربكم إن زلزلة الساعة شيء عظيم، يوم ترونها تذهل كل مرضعة عما أرضعت وتضع كل ذات حمل حملها، وترى الناس سكارى وما هم بسكارى، ولكن عذاب الله شديد.﴾ والكلام عن اليوم الآخر يشمل الكلام عن كل ما يتعلق به كالموت ومقدماته وعلامات الساعة وما يحصل للإنسان بعد الموت من عذاب أو نعيم في القبر والبرزخ ويشمل أيضا قيام الساعة والبعث وحشر الناس للحساب يوم القيامة وما يحصل للناس في ذلك اليوم من أمور عظيمة، ثم بعد ذلك الفصل بين الناس ثم انصرافهم إما إلى الجنة أو إلى النار، وأخيرا ما يناله أهل الجنة في الجنة من نعيم وما يكون لأهل النار من العذاب.

# மரணத்திற்குப் பின்

அகிலத்தார்களைப் படைத்துப் பரிபாலிக்கின்ற இறைவனுக்கே புகழ் அனைத்தும்.கருணையும் ஈடேற்றமும் நபிமார்களிலும் இறைத்தூதர்களிலும் மிகச் சிறந்தவர்களான முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தினர், தோழர்கள் அனைவர் மீதும் உண்டாவதாக. நிச்சயமாக மறுமை நாளை நம்புவது ஈமானின் அடிப்படைகளிலும், அதன் ஆறு கடமைகளிலும் ஒன்றாகும்.எனவே மறுமை சம்பந்தமாக இறைவேதத்திலும் ஆதாரப்பூர்வமான நபி வழியிலும் வந்தவற்றை நம்பாதவரை ஒரு மனிதன் இறைவிசுவாசி யாகமுடியாது.நிச்சயமாக மறுமை நாளை அறிந்து கொள்வதும், அதை அதிகமாக நினைவு கூருவதும் மனித வாழ்க்கையைச் சீர்படுத்துதல் இறையச்சத்தை ஏற்படுத்துதல்,இறை மார்க்கத்தில் உறுதி கொள்ளல் போன்ற பல நன்மையான நிலைகளுக்கு வழிகோலும் எனவே மறுமை நாளின் அமளிகளையும் கடுமைகளையும் எண்ணிப்பார்க்காமல் மறந்திருப்பதைப் போன்று மனிதனின் உள்ளத்தைக் கல்லாக்கி அவனைப் பாவங்கள் செய்வதின் தூண்டக் கூடியது வேறு எது இருக்க முடியும்? மறுமை நாள் குறித்து அல்லாஹ் கூறுகிறான்:அந்நாள் குழந்தைகளை நரைத்தவர்களாக்கிவிடும் (73:17). மேலும் கூறுகிறான்: மனிதர்களே நீங்கள் உங்கள் இறைவனைப் பயந்து கொள்ளுங்கள் நிச்சயமாக இறுதி நாளின் அதிர்ச்சி மகத்தான பெரும் நிகழ்ச்சியாகும்.அந்நாளில் பாலூட்டிக் கொண்டிருக்கும் ஒவ்வொரு தாயும் தான் பாலூட்டும் குழந்தையை மறந்து விடுவதையும்,ஒவ்வொரு கர்ப்பிணியும் தான் சுமந்திருக்கும் குழந்தையைப் பெற்று விடுவதையும் நீங்கள் காண்பீர்கள்.இன்னும் மனிதர்களை மதிமயங்கியவர்களாகக் காண்பீர்கள். அவர்கள் (மதுவில்) மயங்கியவர்களல்லர் எனினும் அல்லாஹ்வின் வேதனை மிகக் கடுமையானதாகும் (22:1,2).

மறுமை நாள் பற்றிய செய்தி, மரணம், மரணத்தருவாயில் முன்னோடிகள் இறுதி நாளின் அடையாளங்கள், மரணத்திற்குப் பின் மண்ணறையிலும், அதற்குப் பின்னுள்ள வாழ்க்கையிலு முள்ள வேதனைகள் அல்லது பாக்கியங்கள் போன்றவற்றையும் மரணத்திற்குப் பின் எழுப்பப்படுதல், மறுமை நாளில் விசார ணைக்காக மக்கள் ஒன்று சேர்க்கப்படுதல் அந்நாளில் மக்க ளுக்கு ஏற்படுகிற மிகப் பெரும் காரியங்கள்,அதற்குப்பின் மக்க ளிடையே தீர்ப்புச் செய்யப்படுதல்,இறுதியாக சுவர்க்கவாசிகள் சுவர்க்கத் தில் பெறும், பாக்கியம் நரகவாசிகளுக்கு நரகத்தில் ஏற்படும் வேதனை போன்ற எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறது.

## 1: மரணம்

மரணம் இவ்வுலகில் உயிருள்ளோரின் இறுதியாகும். அல்லாஹ் கூறுகிறான்: **ஒவ்வொரு ஆன்மாவும் மரணத்தை சுகித்தே தீரவேண்டும்** (3:185). இன்னும் கூறுகிறான்: **பூமி மீதுள்ள எல்லோரும் அழிந்து போகக்கூடியவர்களே** (55:26). இன்னும் அல்லாஹ் நபி (ஸல்) அவர்களிடம் கூறுகிறான்: **(நபியே) நீரும் மரணிக்கக்கூடியவரே இன்னும் நிச்சயமாக அவர்களும் மரணிக்கக்கூடியவர்களே**(39:30).

இவ்வுலகம் எந்த மனிதருக்கும் நிரந்தரமானதல்ல. அல்லாஹ் கூறுகிறான்: **(நபியே) உமக்கு முன்னால் எந்த மனிதருக்கும் நாம் நிரந்தர வாழ்க்கையை ஏற்படுத்தவில்லை,** (21:34).

1.மரணம் என்பது சந்தேகத்திற்கு வழி இல்லாத உறு தியான காரியமாகும். இப்படிஆயினும் மனிதர்களில் அதிகமானோர் இதை மறந்திருக்கின்றனர். எனவே ஒரு முஸ்லிம் மரணத்தை அதிகமாக நினைப்பதும் அதற்குத் தயாராக இருப்பதும் அவசி யமாகும்.இது போன்றே உலக வாழ்விலிருந்து மறுமை வாழ் விற்கு அதற்குரிய நேரம் வருவதற்கு முன்னர் தயராகிக் கொள் வது அவசியமாகும். நிச்சயமாக நபி (ஸல்) அவர்கள் கூறினார் கள்: ஐந்து **நிலைகளை ஐந்து** நிலைகளுக்கு முன் இலாபமாக

கருதிக்கொள்.அவை நீ மரணமடைவதற்கு முன் வாழ்வு, நோய் வருவதற்கு முன் ஆரோக்கியம்,வேலைக்கு முன் ஓய்வு, வயோதிகத்திற்கு முன் வாலிபம்,ஏழ்மைக்கு முன் செல்வம் எனத் தெரிந்து கொள். உலகிலுள்ள எந்தப் பொருளும் மரணித்து விட்டவனுடன் அவனுடைய மண்ணறைக்கு எடுத்துச் செல்லப் படுவதில்லை.நிச்சயமாக அவனுடன் தங்கியிருப்பது அவனுடைய நற்கருமங்கள் மட்டுமே. எனவே எதைக்கொண்டு நீ சந்தோசமும், அல்லாஹ்வின் உதவியும் வேதனையிலிருந்து ஈடேற்றமும் பெற முடியுமோ,அப்படிப்பட்ட நற்காரியங்களைச் சித்தப்படுத்திக் கொள்வதில் நீ அக்கறை கொள்.

2.தெரிந்து கொள். மனிதனின் தவணை அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறியமுடியாத மறைவான விஷயமாகும்.எனவே யார் எப்போது எந்த இடத்தில் மரணமடைவர் என்பதை யாரும் அறியமுடியாது.

3.மரணம் வந்து விட்டால் அதைத் தடுக்கவோ பிற்படுத்தவோ,அதை விட்டும் வெருண்டோடவோ முடியாது. அல்லாஹ் கூறுகிறான்:**ஒவ்வொரு சமுதாயத்தவர்களுக்கும் தவணை உள்ளது அவர்களின் தவணை வந்துவிட்டால் அவர்கள் சிறிது நேரம் பிந்தவும்மாட்டார்கள்,முந்தவும்மாட்டார்கள் (7:34).**

4.ஒரு முஃமினுக்கு மரணம் வந்து விட்டால் நறு மணம் வீசுகின்ற அழகிய தோற்றத்துடன் மலக்குல் மௌத் (வானவர்) அவனிடம் வருகிறார். அவருடன் சுவர்க்கத்தைக் கொண்டு நற்செய்தி கூறும் அருளுக்குரிய மலக்குகளும் வருகிறார்கள். அல்லாஹ் கூறுகிறான்:**நிச்சயமாக எங்கள் இறைவன் அல்லாஹ் தான் எனக்கூறி அதன் மீது யார் நிலைத்து நிற்கின்றார்களோ அவர்களிடம் மலக்குகள் இறங்கி வந்து நீங்கள் பயப்படாதீர்கள்,கவலையும்படாதீர்கள், உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட சுவர்க்கத்தைக் கொண்டு மகிழ்ச்சி பெறுங்கள் (எனக் கூறுவார்கள்).(41:30).** எனவே காஃபிருக்கு மரணம் வந்தால் நாற்றமுள்ள ஆடை அணிந்த, கருமுகமுடைய,பயமுறுத்தும் தோற்றமுள்ள மலக்கு வருவார். அவருடன் வேதனையைக் கொண்டு

எச்சரிக்கை செய்யக்கூடிய மலக்குகளும் வருவார்கள். அல்லாஹ் கூறுகிறான்:**அநியாயக்காரர்கள் மரண வேதனையிலிருக்கும் போது நீங்கள் அவர்களைப் பார்த்தால், மலக்குகள் தம் கைகளை நீட்டி(இவர்களிடம்)உங்களுடைய உயிர்களை** வெளியேற்றுங்கள்.**இன்று நீங்கள் இழிவு தரும் வேதனை** யைக் கூலியாகக் **கொடுக்கப்படுவீர்கள். ஏனெனில் நீங்கள்** அல்லாஹ்வின் **மீது உண்மையல்லாததைக் கூறிக்கொண்டி** ருந்தீர்கள்.**இன்னும் அவனுடைய ஆயத்துக்களை(ஏற்றுக் கொள்வதை)விட்டும் பெருமை அடித்துக் கொண்டிருந்தீர் கள்**(6:93).

எனவே மரணம் வந்து விட்டால் எல்லா மனிதர்க ளுக்கும் தங்களது உண்மை வெளிப்பட்டு, விஷயம் தெளிவாகி விடும்.அல்லாஹ் கூறுகிறான்: **அவர்களில் ஒருவனுக்கு மரணம் வரும்போது என் இறைவனே! என்னை(உலகிற்கு)த் திருப்பி அனுப்பி விடு எனக் கூறுவான்.நான் விட்டு வந்ததில் நல்லதைச் செய்வதற்காக(என்றும் கூறுவான்)அவ்வாறில்லை நிச்சயமாக அது அவன் கூறும் அர்த்தமற்ற வார்த்தையா கும்.அவர்கள் எழுப்பப்படும் நாள் வரை அவர்கள் முன்னே ஒரு திரை இருக்கிறது** (23:99,100).

எனவே மரணம் வந்து விட்டால் காபி.:.ரும், பாவியும் நல்ல காரியங்கள் செய்வதற்காக உலகத்திற்குத் திரும்ப வருவதை விரும்புவார்கள்.எனினும் நேரம் தவறிவிட்ட பின் கை சேதப்படுவது எந்தப் பலனுமளிக்காது. அல்லாஹ் கூறுகிறான்: **அநியாயக்காரர்கள் வேதனை யைக்காணும் போது (இதிலி ருந்து)தப்பித்து மீள்வதற்கு ஏதேனும் வழியுண்டா? என்று அவர்கள் கூறும் நிலையை நீர்காண்பீர்**(42:44).

5.மரணத்திற்குப்பின் யாருடைய கடைசி வார்த்தை "லாயிலாஹ இல்லல்லாஹ்"என ஆகி விடுகின்றதோ அவன் நிச்ச யமாக சுவர்க்கம் செல்வான் என்பது அல்லாஹ் தனது அடி யார்களுக்குச் செய்த கிருபையாகும். நபி(ஸல்)அவர்கள் கூறினார் கள் உலகை விட்டுப் பிரியக்கூடிய ஒருவனின் கடைசி

வார்த்தை "லாயிலாஹ இல்லல்லாஹ்" என ஆகிவிடுமானால் அவன் சுவர்க்கம் செல்வான். ஏனெனில் தூய்மையாக நடந்து கொண்டவனைத்தவிர கஷ்டமான அந்த நேரத்தில் இந்த வார்த்தையைச் சொல்வதற்கு வேறு எவனும் சக்தி பெற மாட்டான். தூய்மையாக நடந்து கொள்ளாதவன் மரண மயக்கத்தில் அவனுக்கு ஏற்படுகின்ற சிரமத்தால் இவ்வார்த்தையைச் சொல்வதை விட்டும் கவனமற்றவனாகிவிடுவான். எனவே மரண நேரத்தை அடைந்தவனுக்கு அங்கு இருக்கக்கூடியவர்கள் "லாயிலாஹ இல்லல்லாஹ்,எனச் சொல்லிக் கொடுப்பது நபி வழியில் வழியுத்தப்பட்டுள்ளது.

## 2. மண்ணறை

நபி(ஸல்)கூறினார்கள் நிச்சயமாக மனிதன் மண்ணறையில் வைக்கப்பட்டு அவனுடைய நண்பர்கள் அவனை விட்டும் திரும்பிச் செல்லும்போது இவன் அவர்களின் செருப்பின் ஓசையைக் கேட்பான். இருமலக்குகள் அவனை உட்கார வைத்து (ஒருமனிதரைக் காண்பித்து)இம்மனிதரைப்பற்றி நீ என்ன கூறிக் கொண்டிருந்தாய் என அவனிடம் கேட்பார்கள். மு.:மினானவன் இவர் அல்லாஹ்வின் அடியாரும் அவனின் திருத் தூதருமாவார் என நான் சாட்சி கூறினேன் என்று கூறுவான். நரகத்தின் உனது இருப்பிடத்தைப்பார் நிச்சயமாக அல்லாஹ் இதற்குப் பகரமாக உனது இருப்பிடத்தைச் சுவர்க்க மாக்கி விட்டான என அவனிடம் கூறப்படும், அவ்விரண்டையும் அவன் பார்ப்பான்.கா.:பிர் அல்லது நயவஞ்சகனிடம் இம் மனிதரைப்பற்றி நீ என்ன கூறிக் கொண்டிருந்தாய் எனக் கேட்கப்படும் அதற்கவன் எனக்குத் தெரியாது மக்கள் கூறியதைக் கூறிக்கொண்டிருந்தேன் எனக் கூறுவான்.அப்போது அவனிடம் நீ அறிந்து கொள்ளவுமில்லை, பின்பற்றவுமில்லை எனக் கூறப்படும். மேலும் இரும்புச் சம்மட்டியால் கடுமையாக ஒரு அடி அடிக்கப்படுவான், அப்போது அவன் ஒரு சப்தமிடுவான்,அதை மனிதன்,

ஜின்னைத் தவிர அனைவரும் கேட்பார்கள்.மண்ணறையில் உடலுக்கு மீண்டும் உயிர் கொடுக்கப்படுவது உலகில் மனித அறிவு விளங்கிக்கொள்ள முடியாத மறுமை விஷயமாகும். மனிதன் மண்ணறையில் நற்பாக்கியத்திற்குத் தகுதியானவனாக இருந்தால் நற்பாக்கியம் வழங்கப்படுவான், வேதனைக்குத் தகுதியானவனாகயிருந் தால் வேதனை செய்யப்படுவான் என்ற விஷயத்தில் முஸ்லிம்கள் ஏக மனதாக உறுதி கொண்டுள்ளார் கள். அல்லாஹ் கூறியுள்ளான்: **காலையிலும் மாலையிலும் அவர் கள் நரக நெருப்புமுன் கொண்டு வரப்படுவார்கள் மேலும் நியாயத் தீர்ப்புக் காலம் நிலை பெற்றிருக்கும் நாளில் ஃபிர்அவ்னின் கூட்டத்தாரை கடினமான வேதனையில் புகுத் துங்கள்(எனக் கூறப்படும்). (40:46).**

நபி (ஸல்) கூறினார்கள் மண்ணறை வேதனையிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுங்கள்.

தெளிவான அறிவு மண்ணறை வேதனையை மறுக்காது. காரணம் இதை மனிதன் வாழ்கையில் ஓர் உதாரணம் மூலம் உணரலாம் தூங்கக்கூடிய ஒருவன் கடினமாக வேதனை செய்யப் படுவதாக கனவில் உணர்ந்து சப்தமிடுகிறான்,உதவியும் தேடுகி றான். ஆனால் அவனுக்கருகிலிருப்பவன் இதை உணர்வ தில்லை. உயிரோடு உறங்கக்கூடியவனுடைய வேதனையையே அருகிலிருப்பவன் உணரமுடியவில்லை என்பது போல மரணித் தவனின் மண்ணறை வேதனை உயிருள்ளவன் நேரடியாக உணரமுடியாது. மண்ணறை வேதனை உடலுக்கும் உயிருக்கும் சேர்ந்ததேயாகும், நிச்சயமாக ரசூல் (ஸல்)அவர்கள் கூறினார்கள் மண்ணறை, மறுமையின் தங்குமிடங்களில் ஆரம்ப இடமாகும், இதிலிருந்து ஒருவன் ஈடேற்றம் பெற்றுவிட்டால் இதற்குப் பின்னுள்ளவை இதை விட எளிதானதாகும். இதிலி ருந்து ஈடேற்றம் பெறாவிட்டால் இதற்குப் பின்னுள்ளவை இதைவிட மிகக் கடினமானதாகும். எனவே மண்ணறை வேத னையிலிருந்து முஸ்லிம்கள் பாவ மன்னிப்புத் தேடுவது அவசியமாகும், குறிப்பாக தொழுகையில் ஸலாம் கொடுப்பதற்கு

முன்னால்(கப்ரு வேதனையை விட்டும் பாது காப்புத் தேடுவது அவசியமாகும்).

இவ்வாறே நரகத்திலும்,மண்ணறையிலும் வேதனை செய்யப்படுவதற்கான முதற்காரணமான பாவங்களிலிருந்து தூரமா குவதில் முயல வேண்டும்.இதற்கு மண்ணறை வேதனையென பெயர் சொல்லப்படுவதற்குரிய காரணம் பெரும் பாலும் மக்கள் மண்ணறையில்தான் அடக்கம் செய்யப்படுகிறார்கள். மேலும் தண்ணீரில் மூழ்கியவர்கள், நெருப்பில் எரிந்து போனவர்கள் மிருகங்களால் தின்னப்பட்டவர்கள், இன்னும் இது போன்று மர ணித்தவர்களும், மரணத்திற்குப்பின் வேதனை செய்யப்படுகிறார் கள் அல்லது நற் பாக்கியம் வழங்கப் படுகிறார்கள். மண்ணறை வேதனை யென்பது இரும்பு அல்லது அது போன்றதால் செய்யப்பட்ட சுத்தியலால் அடிக்கப்படுவது அல்லது அந்த மய்யித்தின் விலா எலும்புகள் ஒன்றோடொன்று பின்னிப்பிணையும ளவிற்கு மண்ணறையில் நெருக்கப்படுவது,மண்ணறையில் இருள் நிரப்பப்படுவது,நெருப்பாலான விரிப்பு விரிக்கப்படுவது. நரகிலிந்து ஒரு வாசல் திறந்து வைக்கப்படுவது.அவனின் தீயசெயல்கள் துர்வாடையுள்ள ஆடை அணிந்த அருவருப்பான முகமுடைய மனிதன் போன்று உருவெடுத்து அவனுடன் அமர்ந்திருப்பது, இன்னும் இது போன்ற பல வகைகள் உள்ளன.

அடியான் காபிஃராகவோ, நயவஞ்சகனாகவோ இருந்தால் வேதனை நிரந்தரமாக இருக்கும். பாவியான முஃமினாக இருந் தால் அவனது பாவ அளவிற்கு வேதனை வழங்கப்பட்டு அதன் பிறகு சில சமயம் வேதனை நிறுத்தப்படும். எனவே முஃமின் மண்ணறையில் அருள் பாலிக்கப்படுவான் அதாவது அவனது மண்ணறை விசாலமாக்கப்படும், ஒளி நிரப்பப்படும், சுவர்க்க வாசல் திறக்கப்பட்டு அதன் வழியாக அதன் நறுமணம் வீசிக் கொண்டிருக்கும், சுவர்க்கத்தின் விரிப்பு விரிக்கப்படும், அவனது நற்செயல் அழகிய மனித வடிவில் உருவெடுத்து மண்ணறை யில் அவனுடன் உறவாடிக் கொண்டிருக்கும்.

## 3. இறுதி நாளும் அதன் அடையாளங்களும்

1–அல்லாஹ் இவ்வுலகத்தை நிரந்தரமாக இருப்பதற்காக படைக்கவில்லை மாறாக அதன் மீது அது முடிவு நாள்வரும் அந்நாளே இறுதி நாளாகும், அதுவே சந்தேகமில்லாத உண்மையுமாகும்.அல்லாஹ் சொல்கிறான்: **நிச்சயமாக இறுதிநாள் வந்தே தீரும் அதில் சந்தேகமில்லை** (40:59).மேலும் கூறுகிறான்: **நிராகரிப்பாளர்கள் இறுதி நாள் எங்களிடம் வருமா? எனக் கேட்கிறார்கள்(நபியே)நீர் கூறும் ஆம் எமது இறைவனின்மீது சத்தியமாக நிச்சயமாக அது உங்களிடம் வரும்**(34:3).

இறுதிநாள் சமீபமானதே. அல்லாஹ் கூறுகிறான்: **இறுதிநாள் நெருங்கிவிட்டது** (54:1). மேலும் கூறுகிறான்: **மனிதர்களுக்கு அவர்களுடைய கணக்கு(விசாரணை நாள்) நெருங்கிவிட்டது ஆனால் அவர்களோ அதைப் புறக்கணித்து, பராமுகமாக இருக்கிறார்கள்** (21:1).

எனினும் அது நெருக்கமாக இருக்கிறதென்பது மனித அறிவால் அறிந்து கொள்ளக்கூடிய விஷயமல்ல, அதை அவர்கள் அறிந்துகொள்ளவும் முடியாது. எனினும் அல்லாஹ்வின் விசாலமான அறிவையும் உலகத்தில் கழிந்துவிட்ட கால அளவையும் கவனிக்கும் போது மறுமை நாள் சமீபமானது என அறியலாம். மறுமை பற்றிய அறிவு அல்லாஹ் தனது அறிவால் தேர்வு செய்து வைத்துள்ள மறைவான விஷயத்திலுள்ளதாகும். அவன் இவ்விஷயத்தைத் தனது படைப்புகளில் எவருக்கும் தெளிவுபடுத்திக் கொடுக்கவில்லை. அல்லாஹ் கூறுகிறான் **மக்கள் உம்மிடம் மறுமை நாள் பற்றிக் கேட்கிறார்கள், நிச்சயமாக அது பற்றிய அறிவு அல்லாஹ்விடமே இருக்கிறதென நீர் கூறுவீராக! அதை நீர் அறிவீரா? அது சமீபமாக வந்துவிடலாம்** (33:63).

நிச்சயமாக ரசூல் (ஸல்)அவர்கள் இறுதி நாள் சமீபமாக வருவதின்மீது அறிவிக்கக்கூடிய அடையாளங்களைக் கூறியுள்ளார்கள்.மஸீஹுத்தஜ்ஜால் வருவதும், அவன் வருகையால் மக்கள் பெரும் சோதனைக்குள்ளாக்கப்படுவதும் அதன் அடையா

போகுமளவிற்கு வழக்கத்திற்குமாறான அபூர்வமான செயல்களைச் செய்து காட்டுவதின் மீது அல்லாஹ் அவனுக்கு சக்தி வழங் குவான். அதாவது வானை, மழை பொழியச் செய்யும்படி ஏவு வான் அது மழை பொழியும், புற்பூண்டுகளை முளைவிக்கும்படி பூமிக்கு ஆணையிடுவான் அது அவற்றை முளைவிக்கும், மரித்தவனை உயிர்ப்பிப்பான், இன்னும் இவை அல்லாத பலவற்றையும் செய்வான்.மேலும் நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள் :நிச்சயமாக அவன் ஒற்றைக் கண்ணனாக இருப்பான் சுவர்க் கம், நரகம் போன்றவற்றைக் கொண்டு வருவான். எதை அவன் சுவர்க்கம் என்று கூறுகிறானோ அது நரகமாகும், எதை அவன் நரக மென்று கூறுகிறானோ அது சுவர்க்கமாகும். அவன் பூமியில் நாற்பது நாட்கள் இருப்பான். அதில் ஒரு நாள் ஒருவருடம் போன்றும், ஒருநாள் ஒருமாதம் போன்றும், ஒரு நாள் ஒருவாரம் போன்றும் ஏனைய நாட்கள் சாதரண நாட்கள் போன்றுமிருக்கும்.

பூமியில் மக்கா, மதீனாவைத்தவிர அவன் நுழையாத வேறு இடங்களே இருக்காது. சுபுஹுத் தொழுகை நேரத்தில் டமாஸ்கஸின் கிழக்குப்பகுதியிலுள்ள வெள்ளை மனாராவிலிருந்து ஈஸா(அலை)அவர்கள் இறங்கிவருவதும் இறுதி நாள் சமீபமாகு வதின் அடையாளத்திலுள்ளதாகும்.அவர்கள் சுபுஹுத் தொழு கையை மக்களுடன் தொழுவார்கள், அதன்பின் தஜ்ஜாலைக் கொன்று விடுவார்கள்.சூரியன் மேற்கில் உதிப்பதும் இறுதிநாளின் அடையாளமாகும். அப்படி உதிப்பதை மக்கள் காணும் நேரத்தில் நடுங்கி ஈமான் கொள்வார்கள்,எனினும் அவர்களின் ஈமான் அவர் களுக்குப் பயன் அளிக்காது. இன்னும் இறுதி நாளுக்கு பல அத் தாட்சிகள் உள்ளன

2-இறுதி நாள் பாவிகளின் மீதே ஏற்படும், அதாவது இறுதி நாள் ஏற்படும் முன் அல்லாஹ் தூய்மையான ஒரு காற்றை அனுப்பி வைப்பான். அக்காற்று முஃமின்களின் உயிர்க ளைக் கைப்பற்றிவிடும். அதன் பின்னர் சூர் ஊதும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்ட மலக்கிடம் அதில் ஊதும்படி ஏவுவான் (சூர்

என்பது ஒரு பெரும் கொம்பாகும்) அல்லாஹ் படைப்பினங்களை மரணிக்கச் செய்யவும், உலகம் முடிவதையும் நாடினால் மலக்கை சூரில் ஊதும்படி ஏவுவான். மக்கள் அந்த சப்தத்தைக் கேட்டவுடன் மயங்கி விடுவார்கள். அல்லாஹ் கூறுகிறான்: **சூர் ஊதப்படும் அல்லாஹ் நாடியவர்களைத்தவிர வானம், பூமியிலுள்ள அனைவரும் மயங்கி விடுவார்கள்**(39:68).

இது வெள்ளிக் கிழமையில் ஏற்படும். அதன் பின் அனைத்து மலக்குகளும் மரணித்து விடுவார்கள். அல்லாஹூத் தஆலாவைத்தவிர வேறு எவரும் இருக்கமாட்டார்கள்.

3–மனிதனின் உடலனைத்தும் அழிந்துவிடும் மனிதனின் முதுகந்தண்டின் கடைசியிலுள்ள ஒருசிறு பகுதியைத் தவிர வேறு எல்லாவற்றையும் பூமி தின்றுவிடும். எனினும் நபிமார்களின் உடல்களைப் பூமி தின்னாது. அலலாஹ் வானிலிருந்து ஒரு தண்ணீரை இறக்கி வைத்து(அழிக்கப்பட்ட)உடல்களை வளர்ப்பான்.அல்லாஹ் மக்களை உயிரூட்டி எழுப்ப நாடினால் சூர் ஊதும் பொறுப்பிற்குரிய மலக்கு இஸ்ராபீ:ல் அவர்களை உயிர்ப்பிப்பான். அவர் இரண்டாம் முறை சூர் ஊதுவார் அல்லாஹ் எல்லாப் படைப்புகளையும் உயிர்ப்பிப்பான். மக்கள் அவர்களின் மண்ணறைகளிலிருந்து அல்லாஹ் அவர்களை ஆரம்பமாக படைத்தது போன்று செருப்பு அணியாதவர்களாக, நிர்வாணிகளாக,விருத்த சேதனம்(கத்னா)செய்யப்படாதவர்களாக வெளி வருவார்கள். அல்லாஹ் சொல்கிறான் :**சூர் ஊதப்படும் அந்நேரம் அவர்கள் மண்ணறையிலிருந்து அவர்களின் இறைவனிடம் விரைந்து வருவார்கள்**(36:51). மேலும் கூறுகிறான்: **நிச்சயமாக அவர்கள்(தாங்கள் ஆராதனை செய்யும்)எல்லைக் கற்களின் பால் விரைந்து செல்பவர்களைப் போல் அந்நாளில்(தங்கள்) கபுருகளிலிருந்து வெளியேறுவார்கள் அவர்களின் பார்வை கீழ்நோக்கி இருக்கும், இழிவு அவர்களைச் சூழ்ந்து கொள்ளும் அந்நாள்தான் அவர்கள் வாக்களிக்கப்பட்டிருந்த நாளாகும்**(70 :43,44).

முதலாவதாக பூமி பிளந்து வெளிப்படுபவர் நமது நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள்தாம். இப்படித்தான் (ஸல்) அவர்கள் மூலம் செய்தி வந்துள்ளது.அந்நாளில் பூமி தூள், தூளாக்கப்படும்,வானம் பிளந்து போகும், கோளங்கள் உதிர்ந்து விழுந்து விடும், நட்சத்திரங்கள் அழிந்து போய்விடும். அல்லாஹ் கூறுகிறான்: **வானம் பிளந்துவிடும் போது, கோளங்கள் உதிர்ந்து விழும் போது...(82:1,2).** மேலும் கூறுகிறான்: **இந்தப் பூமி வேறு பூமியாகவும்,வானங்களும் மாற்றப்படும் நாளில் (அவர்கள் தண்டிக்கப்படுவார்கள்)மேலும் அடக்கியாளும் ஏகனாகிய அல்லாஹ்வின் முன்னிலையில் வெளியாகி நிற்பார்கள்(14:48).**

இதன் பின் மக்கள் மஹ்ஷர் மைதானத்திற்கு கொண்டு வரப்படுவார்கள்.அது பரந்த விசாலமான பூமியாகும். காபிஃர்கள் அவர்களின் முகங்கள் மீது ஒன்று சேர்க்கப்படுவார்கள். ரசூல் (ஸல்) அவர்களிடம்,முகங்களின் மீது அவர்கள் எப்படி ஒன்று சேர்க்கப்படுவார்கள் எனக்கேட்கப்பட்டது.அதற்கு (ஸல்) அவர்கள் அவர்களைப் பாதங்களால் நடக்க வைத்தவன் அவர்களை முகங்களாலும் நடக்கவைக்க சக்தி உள்ளவன் எனக் கூறினார்கள். அல்லாஹ்வின் சட்டத்தைப் புறக்கணித்து நடந்தவன் மறுமையில் குருடனாக எழுப்பப்படுவான். அந் நாளில் சூரியன் மக்களை நெருங்கியிருக்கும். அப்போது மனிதர்கள் அவரவர்களின் செயல்கள் அளவிற்கு வேர்வையிலிருப்பார்கள். அவர்களில் கணுக்காலளவு, இடுப்பளவு வேர்வையிலிப்பவர்களும்,முழுக்க வேர்வையில் மூழ்கிவிடுபவர்களும் இருப்பார்கள். அல்லாஹ்வின் நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத அந் நாளில் அவனின் நிழலின் கீழ் நிழல் கொடுக்கப்படுபவர்களும் அங்கு இருப்பார்கள்.ரசூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் நிழலைத் தவிர வேறு நிழலே இல்லாத அந்நாளில் அல்லாஹ் ஏழு நபர்களுக்கு நிழல் கொடுப்பான் நீதமாக நடந்து கொண்ட தலைவன்,அல்லாஹ்வின் வணக்கத்திலேயே வளர்ந்த இளைஞன், தனது உள்ளத்தைப் பள்ளியுடன் தொடர்பு படுத்திக்

கொண்டிருந்த மனிதன்,அல்லாஹ்விற்காக நேசம் கொண்டு அதற் காகவே இணைந்து அதற்காகவே பிரிந்த இரு மனிதர்கள், அந்தஸ்தும், அழகுமுள்ள பெண் தவறு செய்ய அழைத்த போது நிச்சயமாக நான் அல்லாஹ்வைப் பயப்படுகிறேன் எனக் கூறிய மனிதன்,வலக் கரத்தால் தர்மம் செய்து அதை இடது கரம் தெரியாத அள விற்கு மறைத்து விட்டமனிதன், தனித்தி ருந்து அல்லாஹ்வை நினைவு கூர்ந்து, இருகண்களாலும் கண்ணீர்வடித்த மனிதன். இத்தன்மைகள் ஆண்களுக்கு மட்டும் சொந்தமல்ல.பெண்களும் அவர்களின் செயல்கள் பற்றி கேட்கப்படு வார்கள்.அவர்களின் செயல்கள் நல்லவையாகயிருந்தால் சன்மான மும்,செயல்கள் கெட்டவையாகயிருந்தால் தண்டனையுமிருக் கும்.கேள்வி, கணக்கு ஆண்களுக்கிருப்பது போலவே பெண்க ளுக்குமிருக்கிறது.அந் நாளில் மக்கள் கடினமான தாகத்திலி ருப்பார்கள்.அன்றைய ஒரு நாள் ஐம்பதாயிரம் ஆண்டுகளின் அளவாகும்.எனினும் முஃமினுக்கு ஒரு தொழுகையை நிறை வேற்றும் அளவுக்கு அந்நேரம் கழிந்துவிடும்.முஸ்லிம்கள் நபி (ஸல்) அவர்களின் தண்ணீர்த் தடாகத்திற்கு வந்து தண்ணீர் அருந்துவார்கள்.தண்ணீர் தடாகமென்பது நமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு மட்டும் அல்லாஹ் கொடுத்த மிகப் பெரும் மரியாதையாகும் இதில் மறுமை நாளில் நபி (ஸல்) அவர்களின் சமுதாயத்தினர் நீர் அருந்து வார்கள்.அதன் தண்ணீர் பாலை விட மிகவெண்மையானதா கவும்,தேனைவிட மிக சுவையானதா கவும் கற்பூர மணத்தை விட மிக நறு மணமுள்ளதாகவும், அதன் பாத்திரங்கள் வானின் நட்சத்திரங்கள் அளவிற்குமிருக்கும். அதில் ஒரு முறை நீர் அருந்தியவன் அதன் பின் ஒருபோதும் தாகிக்கவே மாட்டான்.மஹ்ஷர் மைதானத்தில் மக்கள் தங்களி டையே தீர்ப்புச் செய்யப்படுவதையும்,கேள்வி, கணக்குக் கேட்கப் படுவதையும் எதிர்பார்த்தவர்களாக அங்கு நீண்ட நேரமிருப்பார் கள்,கடினமான வெப்பத்தில் நிற்பதும்,எதிர்பார்ப்பதும் நீண்டு விடுகிறபோது மக்கள் தங்களிடையே தீர்ப்புச் செய்யப்படுவதற்காக அல்லாஹ்விடம் பரிந்துரை செய்பவர்களைத்

தேடுவார்கள்.அப்போது அவர்கள் ஆதம் (அலை) அவர்களிடம் வருவார்கள்,அவர்கள் தனக்குரிய சிரமத்தைக் கூறுவார்கள். பிறகு நூஹ்,இப்றாஹீம், மூஸா, ஈஸா (அலைஹிம்) என ஒவ் வொரு நபியாக வருவார்கள்,அவர்களில் ஒவ்வொருவரும் தங்களுக்குரிய சிரமங்களைக் கூறி பரிந்துரை செய்ய இயலா தெனக் கூறிவிடுவார்கள்.இறுதியாக முஹம்மது (ஸல்) அவர்களி டம் வருவார்கள் அப்போது (ஸல்)அவர்கள் அதற்கு தாமே தகுதியானவரெனக் கூறி, அர்ஷிற்குக் கீழ் சுஜூது செய்வார்கள் அலலாஹ் அவர்களுக்கு கற்றுக்கொடுத்த எல்லாப் புகழ் மொழி களைக் கொண்டும் அல்லாஹ்வைப் புகழ்வார்கள். அப்போது முஹம்மதே! உமது தலையை உயர்த்தும்,நீர் கேளும் கொடுக் கப்படுவீர், பரிந்துரை செய்யும், உமது பரிந்துரை ஏற்றுக் கொள்ளப்படு மெனக் கூறப்படும். அப்போது அல்லாஹ் தீர்ப்புச் செய்யப்படுவதற்கும், கணக்குக் கேட்கப்படுவதற்கும் அனுமதி வழங்குவான். முஹம்மது (ஸல்) அவர்களின் உம்மத்தினர்தாம் முதன் முதலில் கேள்வி, கணக்கு கேட்கப்படுவார்கள்.அடியான் செய்த செயல்களில் கேட்க்கப்படும் முதல் கேள்வி தொழுகைபற்றியதாகும்.அது சரியானதாகவும்,எற்றுக் கொள்ளப்பட் டதாகவுமாகிவிட்டால் ஏனைய செயல்கள் எழிதாக்கப்படும்.அது மறுக்கப்பட்டு விட்டால் ஏனைய செயல்களும் மறுக்கப்பட்டு விடும். இது போன்றே ஒரு அடியான் ஐந்து காரியங்கள் பற்றி கேள்வி கேட்கப்படுவான்.அதாவது அவன் தனது வயதை எவ் வாறு கழித்தான், வாலிபத்தை எப்படி பயன்படுத்தினான்,பொருள் எங்கிருந்து சம்பாதித்தான் எப்படிச் செலவழித்தான், அவன் கற்றுக்கொண்ட கல்வியை வைத்து என்ன செய்தா னெனக் (கேட்கப்படுவான்)மேலும் அடியார்களிடையே தீர்ப்புச் செய்யப் படும் முதல் காரியம் இரத்தங்கள் (கொலை, காயம்)பற்றிய தீர்ப்பாகும்.அந்நாளில் பழி வாங்கப்படுவது நன்மை,தீமைகளைக் கொண்டாகும். ஒரு மனிதனின் நன்மையிலிருந்தெடுத்து அதை அவனுடைய வாதியிடம் கொடுக்கப்படும், நன்மைகள் தீர்ந்து விட்டால் வாதியின் தீமையை எடுத்து இவனிடம் போடப்படும்.

கேள்வி,கணக்கிற்குப் பின் சிராத் என்னும் பாலம் அமைக்கப்படும் "அது முடியைவிட மெல்லியதாகவும், வாளைவிட கூர்மையான தாகவுமிருக்கும். அது நரகத்தின் மீது அமைக்கப்படும்" மக்கள் அதில் அவரவர் கணக்கினளவிற்கு நடந்து செல்வார்கள். அபபடிச் செல்பவர்களில் கண் சிமிட்டும் நேரத்திற்குள் கடந்து செல்பபவர்களும்,காற்று போன்று செல்பவர்களும், மிக விரைவாகச் செல்லும் குதிரை போன்று செல்பவர்களும், தவழ்ந்து. தவழ்ந்து செல்பவர்களுமிருப்பார்கள்.அப்பாலத்தின் மீது கோர்த்திழுக்கக்கூடிய கொழுத்துச் சங்கிலிகளுமிருக்கின்றன. அது மனிதர்களைப்பிடித்து நரகில் போட்டுவிடும். காபி∴ர்களும், அல்லாஹ் நாடிய பாவிகளான மு∴மின்களும் நரகில் விழுந்து விடுவார்கள்.காபி∴ர்கள் நிரந்தர மாக நரகிலேயேயிருப்பார்கள். பாவியான மு∴மின்கள் அல்லாஹ் நாடிய அளவிற்கு வேதனை செய்யப்பட்டு பின் சுவர்க்கம் செல்வார்கள் நரகம் சென்றுவிட்ட ஏகத்துவவாதிகள் சிலருக்கு பரிந்துரை செய்வதற்காக நபிமார்கள்,ரசூல்மார்கள்,நல்லடியார்கள் இவர்களில் அல்லாஹ், தான், நாடியவர்களுக்கு பரிந்துரை செய்ய அனுமதி வழங்குவான். இவர்களால் பரிந்துரை செய்யப்படுபவர்களை அல்லாஹ் நரகத்திலிருந்து வெளியேற்றுவான் இப்பாலத்தை கடந்து சென்ற,சுவர்க்கவாதிகள் சுவர்க்கத்திற்கும், நரகத்திற்குமிடையே அமைக்கப்பட்டிருக்கும் ஓரிடத்தில் நிற்பார்கள்.அவர்கள் சிலர்,சிலரிடத்திலிருந்து பழி வாங்கப்பட வேண்டியவர்கள்,எனவே யார் தனது சகோதரனுக்கு அநியாயம் செய்திருக்கிறானோ அவன் பழி வாங்கப்படுவதுவரை அல்லது அவனை இவன் திருப்திப்படுத்தும் வரை இவன் சுவர்க்கம் செல்லமுடியாது.சுவர்க்க வாசிகள் சுவர்க்கத்திலும்,நரகவாசிகள் நரகத்திலும் நுழைந்து விட்டால் மரணம் ஒரு ஆட்டின் வடிவத்தில் கொண்டுவரப்பட்டு, சுவர்க்கத்திற்கும், நரகத்திற்குமிடையே அறுக்கப்படும். சுவர்க்க வாசிகளும், நரக வாசிகளும் அதைப் பார்ப்பார்கள்.பிறகு சுவர்க்க வாசிகளே! உங்களுக்கு மரணமே கிடையாது இதில் நீங்கள் நிரந்தரமாக இருங்களெனவும்,நரகவாசிகளே! உங்களுக்கும் மரணமே கிடையாது

இதிலேயே நீங்கள் நிரந்தரமாக இருங்களெனவும் கூறப்படும் ஒருவன் சந்தோசத்தால் மரித்துவிடுவதாகயிருந்தால் சுவர்க்கவாசிகள் மரணித்து விடுவார்கள்.ஒருவன் கவலையால் மரணித்து விடுவதாகயிருந்தால் நரகவாசிகள் கவலையால் மரணித்து விடுவார்கள்.

## நரகமும் அதன் வேதனையும் :

அல்லாஹ் கூறுகிறான்: **நரகத்தைப் பயந்து கொள்ளுங் கள் அதன் எரி பொருள் மனிதர்களும், கற்களுமாகும். அது காபி.:ர்களுக்காக தயாரிக்கப்பட்டுள்ளது(2:24).**
ரசூல் (ஸல்) அவர்கள் தங்களின் ஸஹாபாக்களிடம் கூறினார்கள் நீங்கள் எரிக்கும் நெருப்பு ஜஹன்னமென்னும் நரகின் நெருப்பில் எழுபது பகுதிகளில் ஒன்றாகும். அப்போது அவர்கள் அல்லாஹ் வின் தூதரே! இதுவே போதுமெனக் கூறினார்கள். அதற்கு (ஸல்)அவர்கள் நிச்சயமாக இது அறுபத்தொன்பது மடங்குகளால் மேலதிகமாக்கப்பட்டுள்ளது,அவைகள் அனைத்தும் இது போன்ற சூடுள்ளதுதான் எனக் கூறினார்கள்.நரகம் ஏழு அடுக்குகளைக் கொண்டதாகும் அதில் ஒவ்வொரு அடுக்கும் மற்றதை விட மிகக் கடுமையான வேதனை உள்ளதாகும். அதில் ஒவ்வொரு அடுக்கிலும் செயல்களைப் பொறுத்து அதற்குத் தகுதியானவர்களிருப்பார்கள்.நயவஞ்சகர்கள் நரகத்தின் அடித்தட்டிலிருப்பார்கள்.அதுதான் மிகக் கடுமையான வேதனைக்குரியதாகும். காபி.:ர்களுக்கு நரகத்தில் வேதனை இடைவிடாத நிரந்தர வேதனையாகும்.எனினும் அவர்கள் நரகத்தில் கரிந்து விடும் போதெல்லாம் அதிகமான வேதனை கொடுக்கப்படு வதற் காக மறுபவும் பழைய நிலைக்கு மீட்கப்படுவார்கள்.அல்லாஹ் கூறுகிறான்: **அவர்களின் தோல்கள் கரிந்திடும் போதெல்லாம் அவர்கள் வேதனை அனுபவிப்பதற்காக வேறு தோல்களை நாம் ஏற்படுத்துவோம்(4:56).** மேலும் கூறுகிறான் :**எவர்கள் நிராகரித்தார்களோ அவர்களுக்கு நரக நெருப்புத்தானிருக்கிறது,அவர்கள் மரணித்துப் போகும்படியாக அவர்கள் காரியம்**

முடிவு செய்யப்படமாட்டாது. மேலும் அ(ந்நரகத்)திலுள்ள வேதனை இலேசாக்கப்படவும்மாட்டாது. இவ்வாறே நாம் எல்லா காபிஃர்களுக்கும் கூலி வழங்குவோம்(35:36). அதில் அவர்கள் விலங்கிடப்படுவார்கள், அவர்களின் கழுத்துக்களிலும் விலங்கிடப்படும்.அல்லாஹ் சொல்கிறான்: இன்னும் அந்நாளில் குற்ற வாளிகளை சங்கிலிகளால் பிணைக்கப்பட்டவாகளாக (நபியே) நீர்காண்பீர்.அவர்களின் ஆடைகள் தாராலானதாகும். அவர்களின் முகங்களை நெருப்பு மூடியிருக்கும்(14:49,50). நரகவாசிகளின் உணவு ஜக்கூமெனும் கள்ளிமரமாகும். அல்லாஹ் கூறுகிறான்:நிச்சயமாக ஜக்கூம்(கள்ளி)மரம் பாவிகளின் உண வாகும். அது உருக்கப்பட்ட செம்பு போன்றிருக்கும்.அது வயிறுகளில் வென்னீர் கொதிப்பதைப் போன்று கொதிக் கும்(44:41–46).

ஜக்கூம் மரத்திலிருந்து ஒரு சொட்டு உலகில் விழுந்து விட்டால் உலகிலுள்ளவரின் வாழ்க்கை வீணாகிவிடும். இப்படி யிருக்க அதுவே உணவாக கொடுக்கப்படுவர்களின் நிலை எப்படியிருக்குமென ரசூல் (ஸல்) அவர்கள் கேட்டார்கள். நரக வேதனையின் கடினத்தையும்,சுவர்க்க பாக்கியத்தின் கண்ணியம் பற்றியும் பின் வருகின்ற நபி (ஸல்) அவர்களின் ஹதீஸ் விளக்கிக்காட்டுகிறது: மறுமையில் உலகில் மிக பாக்கி யத்துடன் வாழ்ந்த காபிஃர்களில் ஒருவன் கொண்டு வரப்படு வான்.அவனை நரக நெருப்பில் ஒருமுறை மூழ்க வைக்கப் பட்ட பின் அவனிடம் ஏதேனும்(உலகில்)அருள் பாக்கியமி ருந்ததா? என அவனிடம் கேட்டகப்படும், அப்போது அவன் எந்தப் பாக்கியமும் எனக் கிருந்ததில்லையே என்பான். ஒரு முறை நரகத்தில் முக்கியதால் உலக பாக்கியங்கள் அனைத்தை யும் அவன் மறந்து விடுகிறான். இவ்வாறே உலகில் மிகக் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த ஒரு முஃமின் கொண்டு வரப்பட்டு ஒரு முறை சுவர்க்கத்தில் நுழைவிக்கப்பட்ட பின்(உலகத் தில்)ஏதேனும் கஷ்டமிருந்ததா? எனக் கேட்கப்படுவான். அதற்க வன் எந்தக் கஷ்டமும், நோவினையும் எனக்கிருந்ததில்லையே

எனக் கூறுவான்.சுவர்க்கத்தில் ஒரு முறை நுழைவிக்கப்பட்டதால் கஷ்டம், ஏழ்மை, பாக்கியமின்மை இவை உலகில் ஏற்பட்டதை அவன் மறந்து விடுகிறான் "

## சுவர்க்கத்தின் தன்மை:

சுவர்க்கம் இறைவனின் நல்லடியார்களுக்குரிய கண்ணியமான, நிரந்தரமான வீடாகும், அதிலுள்ள பாக்கியங்கள் எந்தக் கண்ணும் கண்டிராத, எந்தக் காதும் கேட்டிராத, எந்த மனித உள்ளத்திலும் கற்பனை செய்யப்பட்டிருக்காதவையாகும். அதுமனிதன் படித்ததிற்கும்,கேள்விப்பட்டதற்கும் அப்பாற்பட்டதாகும். அல்லாஹ் சொல்கிறான்: **அவர்கள் செய்த(நற்)கருமங்களுக்குக் கூலியாக மறைத்து வைக்கப்பட்டுள்ள கண் குளிர்ச்சியை எந்த ஒரு ஆன்மாவும் அறிந்து கொள்ள முடியாது**(32:17).

சுவர்க்கத்தின் அந்தஸ்துகள் முஃமின்களின் செயல்களின் அளவைப் பொறுத்து ஏற்றத் தாழ்வுடையதாகும். அல்லாஹ் கூறுகிறான்: **உங்களில் ஈமான் கொண்டவர்களுக்கும், கல்வி வழங்கப்பட்டவர்களுக்கும் அந்தஸ்துக்களை அல்லாஹ் உயர்த்துகிறான்**(58:11).

சுவர்க்கத்தில் அவர்கள் விரும்பியவற்றை உண்ணவும், குடிக்கவும் செய்வார்கள். அவற்றில் நிறம் மாறிவிடாத தண்ணீர் ஆறுகளும், ருசி மாறாத பாலாறுகளும்,தெளிவான தேனாறுகளும், சுவையான மதுபான ஆறுகளும் உள்ளன. அவர்களின் மது உலக மது போன்றதல்ல.அல்லாஹ் கூறுகிறான்: **தெளிவான பானம் நிறைந்த குவளைகள் அவர்களைச் சுற்றிக் கொண்டு வரப்படும் (அது) மிக்க வெண்மையானது, அருந்துபவருக்கு மதுரமானது. அதில் கெடுதியுமிராது, அதனால் அவர்கள் புத்தி தடுமாறவும் மாட்டார்கள்**(37:45,46,47).

சுவர்க்கத்தில் ஹூருல் ஐன் பெண்கள் மணமுடித்து வைக்கப்படுவார்கள்.நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்:சுவர்க்கத்துப் பெண்களில் ஒருபெண் உலகத்தாரிடத்தில் வெளியேறி வந்து விட்டால் வானம்,பூமிக்கிடையே உள்ளவற்றை ஒளிமயமாக்கி

விடுவாள். அவற்றில் நறுமணத்தை நிரப்பிவிடுவாள். சுவர்க்க வாசிகளின் மிகப்பெரும் பாக்கியம் அல்லாஹ்வைத் தரிசிப்பதாகும்.சுவர்க்கவாசிகள் மல,ஜலம் கழிக்கவோ, மூக்குச் சிந்தவோ, உமிழவோமாட்டார்கள்.அவர்களின் சீப்புகள் தங்கமாகவும்,வேர்வைகள் கஸ்தூரியாகவுமிருக்கும். அவர்களின் இவ்வருள் பாக்கியம் துண்டித்திடவோ, குறைந்திடவோ செய்யாத நிரந்தர பாக்கியமாகும். நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள் :யார் சுவர்க்கம் நுழைகிறாரோ அவர் பாக்கியம் பெற்றுவிட்டார், சிரமப்படவோ, சோர்வடையவோமாட்டார். சுவர்க்கவாசிகளின் குறைந்த பங்கு உலகமனைத்தும் பத்துமுறை வழங்கப்படுவதைவிட சிறந்ததாகும்.இவ்வாறு வழங்கப்படுபவன்தான் நரகிலிருந்து வெளியேறி கடைசியில் சுவர்க்கம் நுழைந்தவன்.

இறுதியாக சக்திமிக்க அல்லாஹ்விடம் நமக்கு சுவர்க்க பாக்கியத்தை வழங்கிடவும், நரகிலிருந்து பாது காத்திடவும் வேண்டிக் கொள்கிறோம். நிச்சயமாக அல்லாஹ் யாவற்றையும் கேட்பவனாகவும், பதிலளிக்கக்கூடியவனாகவுமிருக்கிறான்.

وصلى الله تعالى وسلم وبارك على نبينا محمد وعلى آله وصحبه أجمعين...

# اليــــوم الآخــــر

## باللغة التاميلية

إعداد
شعبة توعية الجاليات في الزلفي

هذه الطبعة
تمت بإشراف المكاتب التعاونية للدعوة والإرشاد
بالبديعة والصناعية الجديدة

# اليـــوم الآخـــر

## باللغة التاميلية

إعداد

شعبة توعية الجاليات في الزلفي

سنة الطبع ١٤١٩هـ

طبع على نفقة أحد المحسنين
غفر الله له ولوالديه ولجميع المسلمين

المكاتب التعاونية للدعوة والإرشاد بالبديعة والصناعية الجديدة
تحت إشراف وزارة الشؤون الإسلامية والأوقاف والدعوة والإرشاد
ص.ب: ٢٤٩٣٢ الرياض ١١٤٥٦ - البديعة: تلفون ٤٣٣٠٨٨٨ (أربعة خطوط)
الصناعية: تلفون ٤٣٠٣٥٧٢ - فاكس ٤٣٠١١٢٢ المملكة العربية السعودية